REGD.No. M. 6311 ★ தனி இதழ் 1 அணா ★ இலங்கையில் 10 சதம் ★ PHONE: 55630

# நம் நாடு

தி.மு.க. தின இதழ் ஆசிரியர் இரா. நெடுஞ்செழியன்

The "Nam Nadu" A Tamil Daily. ★ The official organ of the D.P.F.

மலர் 3] சென்னை: மார்கழி 25உ. திங்கள் (9—1—56) ★ ★ வெளியூர்: மார்கழி 26உ. செவ்வாய் (10—1—56) [இதழ் 178

## 'கோவா எனக்குச் சேர வேண்டும்'

வேலூர் மன்னர் பரம்பரைக் 'கொடுக்கு' கோரிக்கை

புதுடில்லி, ஜன. 6—

வேலூர், விஜயநகரம் மன்னர்களின் நேரடி வாரிசு என்று தன்னைக் கூறிக்கொள்ளும் ஒருவர், கோவா பகுதியைத் தன்னிடம் தந்துவிட வேண்டும் என்று போர்ச்சுகீசிய ஆதிபத்தியவாதிகளைக் கேட்டிருப்பதாகத் தெரிகிறது.

(4-ம் பக்கம் பார்க்க)

# 'தமிழர்கள் ஒன்றுபட்டு போராட தயாராக வேண்டும்'

## 'திரு-கொச்சி தமிழ்ப் பகுதிகள் தாய்த் தமிழகத்துடன் இணைய வேண்டும்'

### 'கோரிக்கை நிறைவேறவில்லையானால் கொந்தளிப்பு ஏற்படும்'

சென்னை சர்வ கட்சிக் கூட்டத்தில்

பொதுச்செயலாளர் இரா. நெடுஞ்செழியன்

சென்னை, ஜன. 9—

"சேய், தாயினிடத்தில் அணைப்புப் பெறவேண்டும் என்றபோழ்து, இடையிலே பெருநெருப்பு மூட்டப்பட்டிருக்கிறது. சேய், தாய் தன்னை அணைத்துக்கொள்ள மாட்டாளா என்று ஏங்குகிறது; தாயும் தவிக்கிறாள்—சேயை அணைத்துக்கொள்ள; இடையிலே நெருப்பு கொழுந்து விட்டு எரிகிறது என்றால், அது எப்படி வேதனையாக இருக்குமோ, அதைப்போன்றே இந்திய சர்க்கார் பெருநெருப்பை மூட்டிவிட்டிருக்கிறது.

"சேயாக இருக்கிற திரு-கொச்சி—ஆந்திரத் தமிழ்ப் பகுதி மக்கள், தாயாகவுள்ள தமிழக மக்களை எதிர்பார்க்கின்றார்கள்—உதவி கிடைக்குமா என்று; அவ்வித உதவி புரிய நமக்கு உள்ளம் நிலைத்து நிற்கின்ற தன்மை வேண்டும். ஆற்றலும் அறிவும், வாய்ப்பும் வசதியும் உடையவர்கள் ஒன்றுபட்டு முன்வர வேண்டும்.

"வாழைப்பழத் தோலால் வழுக்கி விழுந்து சாவதை விட—பாம்பு கடித்து சாவதைவிட—காலரா, பிளேக், நிமோனியா வந்து சாவதைவிட—தொத்து நோய் கண்டு சாவதைவிட, இத்தகு நாடு மீட்கும் நல்ல காரியத்துக்காக—நாட்டுக்காகசாவது மேல்! அத்தகு உள்ளம் படைத்த வீர இளைஞர்கள் தேவை! அத்தகையோர் ஒன்று திரண்டால்தான், இழக்க இருக்கும் பகுதிகளை மீட்க முடியும்; இன்பத் தமிழகத்தைக் காண முடியும்,"

—என்று, நேற்று மாலை 6-30 மணிக்கு சென்னை திருவல்லிக்கேணி கடற்கரையில் நடைபெற்ற 'தமிழகப் பகுதிகள் இணைப்பு' சர்வ கட்சிப் பொதுக்கூட்டத்தில், தி. மு கழகப் பொதுச்செயலாளர் இரா. நெடுஞ்செழியன் அவர்கள் குறிப்பிட்டார்கள்.

கூட்டத்திற்கு, முன்னாள் மாவட்ட நடுவர் தோழர் சுசபதி எம்.எல்.சி. அவர்கள் தலைமை தாங்கினார்

தோழர்கள் இரத்தினம் எம்.எல்.ஏ, ஹாரிஸ், பிரொச்சர், என். வி. நடராசன், மு வரதராசனார் ஆகியோர் பேசினர்.

தொடர்ந்து நெடுஞ்செழியன் அவர்கள் பேசியதாவது:—

"இந்தத் தமிழகப் பகுதிகள் இணைப்புக் குழுவினர், இந்நாட்டு பல்வேறு அரசியல் கட்சித் தலைவர்களையும் பொதுமக்கள் தலைவர்களையும் இந்த கூட்டத்தில் ஏன் கூட்டினர் என்பதை நீங்கள் நன்கு உணர்ந்திருக்கிறீர்கள்.

"தமிழகத்திலே ஏற்பட்ட பல திருப்பு மையங்களிலே, தமிழகம் இறந்த காலத்தில் பலவற்றை இழந்திருக்கிறது. இப்பொழுது ஒரு திருப்பு மையம் ஏற்பட்டிருக்கிறது. இந்தத் திருப்பு மையத்தில் நாம் சில தமிழ்ப் பகுதிகளை இழக்கும் படியான நிலைமை ஏற்பட்டிருக்கிறது. நாம், நமது கடமையைச் செய்யத் தவறினால், தமிழகம் தேய்ந்து, குறைந்து, வளமிழந்து வாடிட நேரிடும்.

"இயேசு கிறிஸ்து சொன்னார்—கேள்—கொடுக்கப்படும்; தட்டு — திறக்கப்படும்'— என்று! இப்பொழுது கேட்கிற உணர்ச்சியே தமிழர்களுக்கு ஏற்படவில்லை; உள்ளத்திலே உணர்ச்சியில்லை என்றால் எப்படி, கேட்கும் பண்பு பிறக்கும்? இப்படிப்பட்ட நிலையிலில்லாமல், கொஞ்சம் துணிந்து, உள்ள உறுதியுடன் உரிமையைக் கேட்டாக வேண்டும். அவசியம் ஏற்படும்போது தட்டிப் பார்க்கவேண்டியும் வரும். அந்த நிலைமைக்குத்தான் அரசியலார் நம்மை இழுத்துச் செல்லுகிறார்கள்.

"இறந்தகால வரலாற்றை நாம் பார்க்கின்றபோது,

'வட வேங்கடம் தென் குமரி
ஆயிடை தமிழ்கூறு நல்லுலகம்'

என்று, படிக்கிறோம். அந்தத் தமிழகம், பல திருப்பு மையங்களால் குறைந்து குறைந்து இன்று தென் கிழக்கு மூலையில் வந்து ஒடுங்கி உட்கார்ந்துவிட்டது; நாம் பல சமயங்களிலே ஏமாந்து விட்டோம். இப்பொழுதும் நாம் ஏமாறத்தான் வேண்டுமா என்பதுதான் நம் முன் இருக்கும் கேள்வியாகும்?

"சினிமாவிலே ஒரு பாடல் — நாமெல்லாம் கேட்டதுதான்;

"எங்கள் நாடு, இது எங்கள் நாடு
எங்கும் புகழ் தங்கும் நாடு
வளம் பொங்கும் நாடு—வந்த
எல்லார்க்கும் இடம் கொடுத்து
ஏமாந்த நாடு!"

அப்படி ஏமாந்த நிலையிலுள்ளது இன்றையத் தமிழகம்.

"மாநில புது அமைப்புக் குழு—என்னும் குஷ்டரோகக் கிருமி, தமிழகத்தின் உடலில் வேலை செய்யத் துவங்கியுள்ளது. அதற்கான அறிகுறிகள் தெரிகின்றன. குஷ்டம் பிடிக்க முதலில் கிருமிகள் வளரும்; கை கால்களில் சொறிபோல் கிளம்பி விரல்களைத் தின்றுக் கொண்டேவரும்; பிறகு கை காலே போய்விடும். நாம் இப்பொழுதே சிகிச்சை செய்யாவிட்டால், அது ஆளையே விழுங்கிவிடும்.

"மாநிலங்களைத் திருத்தி அமைக்கவேண்டிய அடிப்படைக் காரணம் ஏன் ஏற்பட்டது? எப்படி ஏற்பட்டது? அடிப்படைத் தூண்டுதல் என்ன?—என்பதை நீங்கள் சிந்தித்துப் பார்க்க வேண்டும்.

"வெள்ளைக்காரனுக்கு முன் டச்சுக்காரர்கள், பிரெஞ்சுக்காரர்கள், போர்ச்சுகீசியர்கள்-இப்படி யார் யாரோ வந்தார்கள். ஆனாலும், வெள்ளைக்காரன்போல் ஒரே ஆட்சியாக ஆளவில்லை. வெள்ளைக்காரன் வரும்போது துப்பாக்கிக் குண்டு, பீரங்கியோடு வந்தான்; அப்போது நம் வேந்தர்களிடமிருந்தது—வில், வேல், வாள் முதலிய ஆயுதங்கள். அவன் துப்பாக்கியால் சண்டைக்கு வந்தபோது, இவர்கள் கட்டையையும், கத்தியையும் பெற்றிருந்தனர். ஏன்? ஆண்டவன் கையில் கூட வேலும வாளும், சூலமும், சக்கரமும்தான் இருந்தன. துப்பாக்கி, பீரங்கி முன் எந்த ஆயுதமும் எதுவும் செய்ய முடியவில்லை — செய்ய முடியாது. எனவே, துப்பாக்கி ஆட்சி செய்தது. அவனுடைய துப்பாக்கிப் பேசப் பேச அப்போதுள்ள நம் நாட்டு மக்களுக்கு இருந்த பற்று மொழிப் பற்று—நாட்டுப்பற்று அல்ல—வெறும் சோற்றுப் பற்றுதான். வெள்ளைக்காரன் தன் ஆதிக்க

(4-ம் பக்கம் பார்க்க)

## 'அகண்ட கேரளம்' வேண்டுமாம்!

### தமிழ்ப் பகுதிகள் தாயகத்துடன் இணையக்கூடாதாம்!

பதவியிலிருந்து விலகுமாறு காங்கிரசாருக்கு கோரிக்கை

திருவனந்தபுரம்—

"காங்கிரஸ் மந்திரி சபை, மற்றும் காங்கிரஸ் கட்சி சட்ட மன்ற உறுப்பினர்கள் பதவியிலிருந்து விலகவேண்டும்; காங்கிரஸ் கட்சியின் கேரள மாநிலக் கிளை, மற்றும் இதர கிளைகளும் கூட்டம் கூட்டமாகக் காங்கிரஸ் கட்சியிலிருந்து விலகவேண்டும்" என்று, 21 பிரபல கேரளவாதிகள் கூட்டறிக்கை விடுத்திருக்கின்றனராம்.

எதற்காகத் தெரியுமோ?

இப்போதுள்ள திரு-கொச்சி மாநிலம் முழுதும் அப்படியே புதிய கேரள மாநிலத்தில் அமையவேண்டுமாம்! ஒரு சிறு பகுதி கூட—தென் திருவாங்கூரில் உள்ள ஒரு சிறு தமிழ்ப் பகுதிகூடப் பிரிக்கப்படாமல் 'அகண்ட கேரள'மாக அமைய வேண்டுமாம்.

மாநிலக் குழு சிபாரிசு செய்துள்ள 5 தமிழ் வட்டங்கள்கூட தமிழகத்துடன் சேர்க்கப்படக் கூடாதாம்! கேரளத்துடனேயே இருக்க வேண்டுமாம்!

இதற்காகத்தான் பதவியிலிருந்து திரு—கொச்சி மந்திரிகளும், சட்டசபை உறுப்பினர்களும் விலகிவிட வேண்டும் என்று அச்சுறுத்தப்படுகின்றனராம்.

இந்த அறிக்கையில் சில காங்கிரஸ் கட்சி சட்டசபை உறுப்பினர்களும் கையெழுத்துப் போட்டிருக்கின்றனராம்.

காங்கிரசார் இப்படி இதருடன் சேர்ந்து அறிக்கை வெளியிட்டது, கட்சிக் கட்டுப்பாட்டை மீறுவதாகும் என்றும், காங்கிரஸ் மேலிட உத்தரவைச் சுட்டிக்காட்டி, சில காங்கிரஸ் தலைவர்கள் கருதுகின்றனராம்.

### சென்னை கோரிக்கைக்கு ஆதரவில்லை?

தேவிகுளம், பீர்மேடு சம்பந்தமாக உள்ள சென்னையின் உரிமையைக் காங்கிரஸ் மேலிடம் ஆதரிப்பதாகத் தெரியவில்லையாம்; கூடலூர் சம்பந்தமாக உள்ள சென்னையின் கோரிக்கை விசேட கவனத்துடன் பரிசீலனை செய்யப்படக் கூடுமென்று செய்தி ஒன்று கூறுகிறது.

## 'ஜனசக்தி' இதழின் இழிசெயல்!

### 'கோயபெல்ஸ்' பிரச்சாரம் செய்கிறது

கயிறு திரிக்கும் கம்யூனிஸ்டு இதழுக்கு ஈ. வெ. கி. சம்பத் எச்சரிக்கை

கம்யூனிஸ்டுக் கட்சியின் 'ஜனசக்தி' இதழில், தோழர் ஈ. வெ. கி. சம்பத் அவர்கள், தனது வடநாட்டுச் சுற்றுப் பயணத்தின்போது காசி விசுவநாதர் ஆலயத்தில் கை கட்டி, வாய்பொத்தி பயபக்தியுடன் வழிபாடு நடத்தியதாக வெளியிடப்பட்ட செய்தியைக் கண்டித்துத் தோழர் ஈ. வெ. கி. சம்பத் அவர்கள் கீழ்க்கண்ட அறிக்கையை வெளியிட்டிருக்கிறார்:—

"8—1—56 தேதியிட்டு வெளிவந்துள்ள 'ஜன சக்தி' இதழில் (கம்யூனிஸ்டுக் கட்சியின் வார இதழ்) என்னைக் குறித்து வெளிவந்த செய்தி மிகவும் விஷமத்தனமானப் பச்சைப் புளுகு என்று இதன் மூலம் தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன்.

"அண்மையில் நான் மேற்கொண்ட வடநாட்டுச் சுற்றுப்பிரயாணத்தில் மசூதிகள், சர்ச்சுகள், ஆரிய ஆலயங்கள், பௌத்த, ஜைன கோயில்கள் ஆகிய பலவற்றையும் பலவித நோக்கங்களோடு பார்வையிட்டேன்; ஆனால் வழிபாட்டுணர்வுடன் சென்றேன் என்பதோ, வழிபட்டேன் என்பதோ அப்பட்டமான பொய்யாகும்.

"காசிக்கும் சென்றேன்—'விசுவநாதர் ஆலயம்' என்றழைக்கப்படும் இடத்திற்கும் சென்று பார்வையிட்டேன்; ஆனால், 'இடுப்பில் துண்டைக் கட்டிக்கொண்டு, கைகளை உயரத் தூக்கி, இந்து விதிகளின்படி கும்பிட்டேன்' என்று 'ஜன சக்தி' பத்திரிகை எழுதுவது கயமை ததும்பும் பொய்யுரையாகும்.

"காசி விசுவநாதர் கோயிலுக்குச் சென்றிருந்தோம்—ஆனால், வழிபட அல்ல; கடவுளின் பெயரால் அங்கு நடைபெறும் ஆபாசங்களையும், மதத்தின்

(4-ம் பக்கம் பார்க்க)

Best copy available.

# நம் நாடு

தி.மு.க.தின இதழ் — ஆசிரியர் இரா.நெடுஞ்செழியன்

சென்னை 9—1—'56 திங்கள்


## ஆண்டவன் சன்னதியில் அழுகுரல்!

'பிதாவாகி—சுதனுகி, ஸ்பிரித்து சாந்துவாகிய சர்வேஸ்வரனே! பரமண்டலங்களிலே இருக்கும் எங்கள் பிதாவே! தினசரி எங்களுக்கு வேண்டிய அப்பத்தை நாங்கள் பெற அருள்புரிய வேண்டிய அண்டங்களின் அதிபனல்லவா நீ—கண் திறந்து பார்க்கமாட்டாயோ, கருணை பொழியும் முகிலே! இந்தக் கடையேன் வாழ்வில் படும் அவதியை!'—என்றே, அல்லது, 'அனுத இரட்சகா! ஆபத்பாந்தவா! இறையே! ஈசனே! எம்பெருமானே! எட்டிப் பாரேன் இந்த ஏழையை! ஈரேழு உலகங்களையும், எண்ணற்ற ஜீவராசிகளையும், கோடானுகோடி மனிதர்களையும் படைத்து, கல்லினுள் தேரைக்கும் புல்லுணவு தந்து காத்துவரும் கருணைக் கடவுளே! கார்மேகவண்ணா! இந்த அபலையின் கண்ணீர் உன் கண்களில் படவில்லையா, அழுகுரல் கேட்கவில்லையா! துன்பக் கடலை நீந்த துணைபுரியமாட்டாயோ!' என்றே, அல்லது வேறுவிதமாகவோ ஆண்டவனை நினைந்து, கண்ணீர்மல்க, மனம் கசிந்து உருக, பக்தி சிரத்தையுடன் பூஜை புனஸ்காரம் செய்து, வாழ்வு வளம் பெற வேண்டிக்கொள்ளும் பக்தர்கள் இருக்கிறார்கள்!

பரமன் பாராளுபவன்—உலகுணர்ந்தவன்—உத்தமன்—அருள் புரிபவன்—கருணை முகில் காருண்யசீலன் என்றெல்லாம் போற்றிப் புகழ்ந்து ஏற்றித் தொழப்படும் ஆண்டவனை நம்பும் பக்தர்களே! ஆண்டவன் ஒருவன் இருந்தால்—அப்படி இருந்தாலும் அவன், நேர்மை, நீதி, நியாயம் இவற்றிற்குக் கட்டுப்பட்டவனாய் இருந்தால்—அவன்தான் உலகின் ஒவ்வொரு அசைவுக்கும் காரணமானவன் என்பது உண்மையானால், இந்த உலகில் ஏழை ஏன்—பணக்காரன் ஏன்? உயர்ந்தவன் ஏன்—தாழ்ந்தவன் ஏன்? வாழ்வில் இன்பத்தின் எல்லையைச் சிலரும், துன்பத்தின் எல்லையை பலரும் தொட்டுக்கொண்டிருப்பது ஏன்? இன்பமோ துன்பமோ—அது எல்லோருக்கும் ஒன்ற நிலை இல்லாதது ஏன்? 'அகிலம் முழுவதற்கும் அவனே காப்பாளன்' என்றால், அவனியில் இந்த ஏற்றத் தாழ்வுகள் இருப்பது நியாயமா? பெற்ற தாயே—மனிதப் பிறவியே, தான் பெற்ற செல்வங்களிடையே வேற்றுமை பாராட்டுவது அவஞ்சனை என்றால், மகேசன்—மானிடப் பிறவி அல்ல, தேவன்—'எல்லோருக்கும் தந்தை' என்று அழைக்கப்படுகிறான்—அவன் ஏன் சிலரை ஏழைகளாகப் படைத்து அநீதி இழைத்தான்? அவஞ்சனை புரிந்தான்? இது என்ன நீதி? இது என்ன நியாயம்? ஆண்டவன் எல்லோரையும் சமமாக நடத்த வேண்டிய பொறுப்பை சரிவர நிறைவேற்ற வேண்டாமா, அவன் நீதிமானாயிருந்தால்?—என்று வினவும் பகுத்தறிவு வாதிகளும் இருக்கின்றனர், நாட்டில்!

வேண்டாத ஒன்றை கையெடுத்துத் தொழுது, மடிக்காசைக் காணிக்கையாக்கினால் தான்—'அவன்'து பேராற்றலை, பேரறிவைப் புகழ்ந்து பூஜிப்பதில்தான் தன் வாழ்வின் சிறப்பிருக்கிறது என்று மூடத்தனமாக நம்பி, அறிவை அடகு வைத்து அடிமையாகும் பக்தன் நிலையில்தான் கனம் நிதி அமைச்சர் சுப்பிரமணியம் இருக்கிறார்.

முதல் ஐந்தாண்டுத் திட்டத்தில், வடநாட்டு ஏகாதிபத்திய வாதிகள் தென்னாட்டினை வஞ்சித்த கொடுமை கண்டு கொதித்த நாம்—பகுத்தறிவு வாதிகள் நிலையிலிருக்கும் நாம், கொழுப்பெடுத்த வடநாட்டு ஏகாதிபத்தியத்தின் உண்மைச் சொரூபத்திற்கு 'இதோ, மற்றுமோர் எடுத்துக்காட்டு' என்று நாட்டு மக்களுக்கு எடுத்துச் சொன்னோம்; 'ஏக இந்தியா' என்ற அரசியல் அமைப்பில் நாம் பெறும் 'பலன்'-வடவரை தலைவர்களாக ஏற்றுக்கொண்டு பூஜித்த தென்னாட்டவருக்கு, அவர்களின் காலடியில் தங்கள் உழைப்பின் விளைவுகளை—வியர்வைத் துளிகளை—வரிப் பணத்தைக் கோடி கோடியாகக் கொட்டியழுதவரும் 'அநியாய'த்திற்குத் தரப்படும் 'பரிசு' 'இதோ ஐந்தாண்டுத் திட்டம்'—என்று இடித்துரைத்தோம்.

பக்தர் நிலையிலிருக்கும் நிதி அமைச்சர், 'பாவிகளே! ஆண்டவனின் ஏற்பாடுகளை அவமதிப்பதா? அவன் படைப்பைக் குறை கூறுவதா? அவனது பெருங்கருணையால் நடைபெறும் நிகழ்ச்சிகளை நிந்திப்பதா? பரமனின் சித்தப்படி நடைபெறும் பக்திக் காரியங்களைப் பழிப்பதா?' என்று—பக்தர்கள் பகுத்தறிவுவாதிகளை ஏசுவதுபோல, நம்மை ஏசினார்—'ஏக இந்தியா'வை, இந்தியாவின் ஒற்றுமையைச் சீர்குலைப்பதா? இந்தியப் பேரரசு மேற்கொள்ளும் நடவடிக்கைகளைக் குறை கூறுவதா?—என்று, வடநாட்டு ஏகாதிபத்தியத்தை ஆண்டவனாக நினைத்துக் கொண்டு!

இப்போது, டில்லியில் அந்த ஆண்டவன் சன்னதியில் சென்று ஒப்பாரி வைத்தாராம்; அழுகுரல் கொடுத்தாராம்; முகாரி பாடினாராம்—இந்த நிதி அமைச்சர்.

'முழு முதற் கடவுளே! மூலதேவனே! எங்கள் தென்னாட்டிற்குத் தொழிற் திட்டங்கள் தரக்கூடாதா? நாங்கள் அவதிப்படுகிறோமே, வேலையின்மையால்! தென்னாடு தொழில் துறையில் பின்தங்கிக் கிடப்பது நீ அறியாததா? கருணைக் கடலே! கார்வண்ணா, கடைக்கண் பாரப்பா!—என்று கதறியழுதாராம்; புலம்பினாராம். விபரங்களை வேறோரிடத்தில் வெளியிட்டிருக்கிறோம். அவரது ஒப்பாரிக்கு, ஆண்டவன் முன் அறியாமையால் மண்டியிட்டு, அவனுக்கு தான் அடிமை என்று எண்ணிக் காணிக்கை செலுத்தி, கைப்பொருளையும் இழந்து, வாழ்வு சிறக்கவேண்டிடும் மூட பக்தனுக்கும்—அமைச்சர் சுப்பிரமணியத்திற்கும் அதிகவேறுபாடில்லை அல்லவா, இந்த விஷயத்தில்!

வடநாட்டு 'தேவர்'களின் மூட பக்தரான—அடிபிடியான நிதி அமைச்சருக்கு, பகுத்தறிவு வாதிகள் தரக்கூடிய அறிவுரைகள் நீங்கள் அறிந்தவைதானே!

## வடநாட்டுஎஜமானர்களிடம்சென்னை நிதி அமைச்சர் ஒப்பாரி

### 'உயர்ந்துள்ள வட நாடு மேலும் வளருகிறது; பின்தங்கிய தென்னாடு கவனிக்கப்படவில்லை'

### 'புதிய தொழில்கள் தென்னாட்டில் வேண்டும்'

ஆந்திர முதலமைச்சருடன் சேர்ந்து சுட்டிக்காட்டுகிறார்

புதுடில்லி, ஜன. 6—

சென்னை நிதி அமைச்சர் சுப்பிரமணியம் தனது வடநாட்டு எஜமானர்களிடத்தில், தொழில் துறையில் தென்னாடு பின்தங்கிக் கிடப்பதாயும், பெரும் திட்டங்கள் எல்லாம் வடநாட்டிலேயே துவங்கப்படுவதாயும், திட்ட கர்த்தாக்கள் பின்தங்கிய நிலையிலிருக்கும் தென்னாட்டில் தொழில் வளம் ஏற்படச் செய்வது பற்றிக் கவலை ஏதும் கொள்ளவில்லை என்றும் அழுது புலம்பினராம்!

"சென்னைக்கு முன்பு ரூ. 208 கோடி ஒதுக்குவதாகக் கூறினீர்களே; இப்போது ரூ. 175 கோடி மட்டும்தான் கிடைக்கும் என்கிறீர்களே; என்ன செய்வோம்; எப்படித் தொழில் வளர்ச்சி ஏற்படுத்தச் செய்வோம்; முன்சொன்ன அளவாவது தரக் கூடாதா; ஏற்கனவே ரூ. 400 கோடி பெறுமான எங்கள் திட்டத்தை ரூ. 200 கோடியாக—பாதியாக வெட்டினீர்கள்; அப்போது கைகட்டி வாய்ப்பொத்தி ஏற்றுக்கொள்ளவில்லையா? இப்போது மேலும் குறைக்கிறீர்களே" என்றும் புலம்பினராம்!

தேசிய அபிவிருத்திக் கவுன்சில் நிரந்தரக் குழுக் கூட்டத்தில் பேசுகையிலேயே கனம் சுப்பிரமணியம் இவ்வாறு முகாரி பாடினாராம்.

'ரூ. 4,800 கோடி பெறுமான இரண்டாம் திட்டத்தில் மாநிலங்களுக்கென ஒதுக்கப்பட்டிருப்பது ரூ. 2,250 கோடி; இதில் எங்களுக்கு மக்கள் தொகை அடிப்படையில் நியாயமாகக் கிடைக்கவேண்டிய பத்தில் ஒரு பங்கு—அதாவது ரூ. 225 கோடி கூடத் தரப்படாதது என்ன நியாயத்தின்பாற்பட்டது? எங்களுக்கு உரிய பங்கு ஏன் தரப்படவில்லை? ஏற்கனவே பின்தங்கிய நிலையில் இருக்கும் சென்னையை ஏன் புறக்கணிகிறீர்கள்—வஞ்சிக்கிறீர்கள்? ஆண்டொன்றுக்கு சுமார் ரூ. 50 கோடிவரை கொட்டி அழுகிறோமே உங்கள் காலடியில்; இருந்தும் ஏன் இந்த ஓரவஞ்சனை?' என்று வீரத்தை வரவழைத்துக்கொண்டு கேட்டிருக்கவேண்டிய நிதி அமைச்சர், குரலில் வளைவையும், குழைவையும் காட்டிக் கொண்டு அழுது புலம்பினாராம்—'இவ்வளவுதானா எங்களுக்கு; இது போதாதே'—என்று!!

"வேலை நிலைகள் மோசமாகிக் கொண்டுவருகின்றன; தென்னாட்டில் வேலையில்லாத் திண்டாட்டம் பெருகிவருகிறது; எனவே, மத்திய சர்க்கார் நிறுவ உத்தேசித்திருக்கும் பெரும் தொழிற் திட்டங்களில் சிலவேனும் தென்னாட்டில் நிறுவப்பட வேண்டுவது அவசியம்,"

என்று, ஆந்திர முதன் மந்திரி கோபால ரெட்டியார் குரல் கொடுத்திருக்கிறார்—உறுதி குலையாமல்!

கோபாலரின் குரல் உறுதி கண்ட சுப்பிரமணியமும், கூடச் சேர்ந்து, 'ஆமாம், ஆமாம்; உண்மைதான்; சில பெரிய திட்டங்கள் தென்னாட்டிற்கு வேண்டும் என்று பேசினாராம்.

"வடநாட்டைக் காட்டிலும் தென்னாடு, தொழில் துறையில் மிகப் பின்தங்கிக் கிடக்கிறது; அண்மையில் ஏற்பட்ட புயல்-வெள்ள கோரங்களின்போது தெளிவாக்கப்பட்டதைப்போல மாநிலத்தின் ஏற்ற இறக்கங்கள்கூட பொருளாதாரத்தை வெகுவாகப் பாதித்து வருகின்றன; எனவே, எல்லாத் துறைகளிலும் பின் தங்கிய நிலையிலிருக்கும் தென்னாட்டை வளப்படுத்த வேண்டுவது — அபிவிருத்தி செய்யவேண்டுவது மிக அவசியமான ஒன்றாகும்; துரதிருஷ்டவசமாக, நகல் திட்டம் இதற்கு வழிகோலவில்லை"

என்றும் நிதி அமைச்சர் பேசிய தாகச் சிலர் கூறுவது, ஆச்சரியமாக இருக்கிறது ஏனெனில், இதே கருத்தை நாம் நாடெங்கும் சொல்லும்போது. நம் மீது சீறிப்பாய்ந்து, இழிமொழிகளை அள்ளி வீசி, தனது வடநாட்டு எஜமானர்களின் யோக்கியதாம்சத்திற்கு நற்சாட்சிப் பத்திரம் வழங்க முற்படுபவரல்லவா, அவர்!

"இயற்கை வளப்பங்கள் மிகுந்த பகுதியில் தொழில்கள் துவங்கவேண்டும் என்பது உண்மைதான்; ஆனால், இந்த வாதத்தைக் காட்டி தென்னாடு தொழில்மயமாவதைத் தடுக்க நினைக்கக் கூடாது; கனரகத் தொழில்கள் துவங்க தென்னாட்டில் வாய்ப்பில்லை என்றால், இதர தொழில்களையேனும் துவங்கலாமே!

"தென்னாட்டைப் பொறுத்து, தொழில்களினால் கிடைக்கும் வேலை வாய்ப்புகள் மிகக் குறைவு என்பதால், வேலையில்லாத் திண்டாட்டம் மிக அதிகமாகக் கூடும். இதனைப் போக்க வழி செய்யாத இரண்டாம் திட்டத்தைக் காட்டி, மக்களிடை உற்சாக மூட்டுவது கடினம்"

எனறெல்லாம்கூட, சுப்பிரமணியம் நியாயவாதம் பேசியதாக நிதி அமைச்சரின் சகாக்கள் சிலர் கூறுகின்றனர்.

"திட்டத்தின் நோக்கமே, இந்தியா முழுவதிலும் ஒரேவகையான முன்னேற்றம் காண்பது தான் என்றால், தென்னாட்டில் பெரும் தொழில்கள் துவங்கப் படவேண்டும்,"

என்றும் அவர் எடுத்துரைத்ததாகக் கூறப்படுகிறது.

### வடநாட்டு அகதிகளுக்கு தாராளக் கடன்கள்

இந்திய சர்க்கார் வழங்குகிறது

புதுடில்லி, ஜன 8—

1955 நவம்பர் முடிய அனுமதிக்கப்பட்டுள்ள கடன் தொகை மொத்தம் ரூ. 1,260 84 இலட்சம்; மேற்கு பாகிஸ்தானிலிருந்து இடம் பெயர்ந்து வந்துள்ளவர்கள் கடனாக ரூ 701·45 இலட்சமும், கிழக்கு பாகிஸ்தானிலிருந்து வந்தவர்கள் ரூ. 290·95 இலட்சமும் கடனாகப் பெற்றுள்ளார்கள்.

இடம் பெயர்ந்தோர் புனர் வாழ்விப்பு நிர்வாகத்தினர், இதுவரையில் 16,276 கடன் மனுக்கள் சம்பந்தமாகக் கடன்கள் வழங்கியிருக்கிறார்கள்; இது மட்டுமன்றி, கடன் கேட்டு இடம் பெயர்ந்து வந்துள்ளவர்களிடமிருந்து மேலும் வந்துள்ள 94 மனுக்கள் சம்பந்தமாக ரூ 6 இலட்சம் கடன் வழங்கியிருக்கின்றனர்.

## துறைமுக அபிவிருத்தி: இரண்டாம் திட்டத்தில் ரூ. 58 கோடி

### பெரும் பகுதி வடநாட்டிலே செலவிடப்படும்

புதுடில்லி, ஜன 6—

இரண்டாம் ஐந்தாண்டுத் திட்டத்தில், பெரிய துறைமுகங்களின் அபிவிருத்திக்காகச் சுமார் ரூ 58 கோடிவரை திட்டக் குழு ஒதுக்கி உள்ளதாம்.

இதில் மிகப் பெரும் பகுதி வடநாட்டில் உள்ள துறைமுகங்களின் அபிவிருத்திக்கே செலவிடப்படும் என்று தெரியவருகிறது.

முதல் ஐந்தாண்டுத் திட்டத்தின் கீழ் மேற்கொள்ளப்பட்ட துறைமுக அபிவிருத்தி வேலைகளைப் பூர்த்தி செய்வதற்காக இதில் ரூ. 25·5 கோடி ஒதுக்கப்பட்டு விடுகிறது.

எஞ்சியதில் கல்கத்தா துறைமுகத்திற்குத்தான் அதிகமான தொகை கிடைக்கிறது.

| | |
|---|---|
| கல்கத்தா | ரூ 19·88 கோடி |
| பம்பாய் | ரூ 17·42 கோடி |
| கண்டலா | ரூ. 8·94 கோடி |
| சென்னை | ரூ. 8·46 கோடி |
| கொச்சின் | ரூ. 3·61 கோடி |

இவ்வாறு அத்தொகை பிரித்து ஒதுக்கப்பட்டுள்ளது.

சிறிய துறைமுகங்களின் அபிவிருத்திக்காக ரூ 5 கோடி ஒதுக்கப்பட்டுள்ளதுடன், பல்வேறு துறைமுகங்களிலுமுள்ள கலங்கரை விளக்கங்களை அபிவிருத்தி செய்வதற்கும் ரூ. 4 கோடி ஒதுக்கப்பட்டிருக்கிறதாம்.

★

### 18 புதிய வர்த்தகக் கப்பல்கள் வாங்கப்படுமாம்

இந்திய சர்க்கார் கடன் உதவி

புதுடில்லி, ஜன 6—

1957-ம் ஆண்டிற்குள் 18 புதிய வர்த்தகக் கப்பல்களை வாங்குவதற்கு இந்தியாவில் சில நிறுவனங்கள் முயன்றுவருகின்றனவாம்; இவற்றிற்காக இந்திய சர்க்கார் ரூ. 12,64,00,000 கடனை ஒதுக்கியுள்ளது; இதில் ரூ. 11,14,00,000-யை சம்பந்தப்பட்ட நிறுவனங்கள் பயன்படுத்திக்கொண்டிருக்கின்றனவாம்.



## மத்திய நிதி அமைச்சர் எச்சரிக்கிறார்!

'திட்ட இலக்கை' உயர்த்துவது அபாயமாகுமாம்!

புதுடில்லி ஜன. 6—

"இரண்டாவது ஐந்தாண்டுத் திட்ட இலக்கை ரூ. 4 800 கோடிக்குமேல் உயர்த்துவது அபாயமாகும்"

என்று இந்திய நிதி அமைச்சர் தேஷ்முக, தேசிய அபிவிருத்திக் கவுன்சில் நிரந்தரக் கமிட்டி கூட்டத்தில் எச்சரித்தாராம்!

மேலும் அவர். இப்போதைய இலக்குக்கே பெரும் அளவு 'பற்றாக் குறை வரவு—செலவுத் திட்டத் தயாரிப்பு' முறையைக் கைக்கொள்ளவேண்டியிருக்குமென்றும், அயல்நாட்டு உதவியை நாடுவதற்கு நேரிடுமென்றும் சுட்டிக்காட்டி, திட்டத்தொகையை அதிகரித்தால் தொல்லைகள் ஏற்படுமென்று குறிப்பிட்டாராம்.

★

## பண்டிதரின் பார்வை விரிவடைகிறது?

பின்னடைந்த பகுதிகளுக்கு நிதி ஒதுக்க வேண்டுமாம்!

நிரந்தரக் கமிட்டிக் கூட்டத்திற்கு தலைமை தாங்கிய பிரதமர் நேரு, 'பின்னடைந்த பகுதிகளின் முன்னேற்றத்துக்குக் கணிசமான அளவுக்கு நிதி ஒதுக்கவேண்டும்' என்று வற்புறுத்தினாராம்.

இரண்டாம் ஐந்தாண்டுத் திட்ட நகலில் சர்க்கார் துறைக்கு ரூ 4,800 கோடி முதலீடு என்று இலக்கு நிர்ணயிக்கப்பட்டதை உறுதியாகக் கொள்ளவேண்டுமென்று அவர் வற்புறுத்தினாராம்.

ஆதரித்துவிட்டதாம்!

இரண்டாம் ஐந்தாண்டுத் திட்டத்தில் ரூ. 4 800 கோடி அளவை கவுன்சில் நிரந்தரக் கமிட்டி பொதுவாக ஆதரித்துவிட்டதாம்.

## பட்டுத் தொழில் அபிவிருத்தி

இந்தியப் பேரரசு மானியம்

மைசூர், சென்னை, மேற்கு வங்காளம், அசாம், உத்தரப் பிரதேசம், ஒரிசா ஆகிய மாநிலங்களுக்குப் பட்டுத் தொழில் அபிவிருத்தி செய்வதற்காக மொத்தமாக இந்திய சர்க்கார் ரூ. 90,800 மானியம் ஒதுக்கியுள்ளனர்.

இதில் ரூ. 6,07,400 மைசூர் மாநிலம் பெறுகிறது.

மேற்கு வங்காளத்திற்கு ரூ 1,64,500-மும், சென்னை மாநிலத்திற்கு ரூ. 84,000-மும் ஒதுக்கப்பட்டுள்ளது.

சென்னைக்கு ஒதுக்கப்பட்டுள்ள தொகையில், கூனூரில் ஒரு மத்திய பட்டுப்பூச்சி வளர்ப்பு நிலையத்துக்கு ரூ 69,500; ஹோப் பட்டுப் பண்ணையில் குளிர் பதன வசதிகளை அமைக்க ரூ. 13 635; கொள்ளேகாலம் தாலுக்காவில் பூச்சி வளர்க்கும் அறைகள் இரண்டை அமைப்பதற்கு ரூ. 1000 செலவிடப்படும்.

## பரம்பிக்குளம் திட்டம்

பரிசீலிக்கப்படுகிறதாம்!

ரூ. 32 கோடி செலவில் பரம்பிக்குளம் அணை கட்டுவது சம்பந்தமாகத் தற்பொழுது சென்னை மாநிலத்தின் சார்பில் பரிசீலனை நடந்து வருவதாகக் கூறப்பட்டுள்ளது.

இந்தத் திட்டம் பூர்த்தியானதும் இந்த மாநிலத்திலேயே மிகப் பெரியதாக இருக்கும் என்றும், உபரி நீரை விஞ்ஞான முறையில் பயன்படுத்த வசதி ஏற்பட முடியும் என்றும் குறிப்பிடப்பட்டுள்ளது.

இந்த அணைத் திட்டத்தின் மூலமாக சென்னை, திரு-கொச்சி இரு மாநிலங்களுக்கும் நன்மை ஏற்படுமாம்.

## சென்னை மாநில வாக்காளர்கள்

மாவட்ட வாரியாக எண்ணிக்கை

சென்னை, ஜன 7—

1955-ம் ஆண்டு இறுதியான வாக்காளர் பட்டியலின்படி, மாவட்டவாரியாக வாக்காளர்களின் எண்ணிக்கையைச் சென்னை சர்க்கார் அறிவித்திருக்கின்றனர்:—

| | |
|---|---|
| சென்னை | 9,08,197 |
| செங்கல்பட்டு | 10,31 954 |
| வடாற்காடு | 15,98,545 |
| தென்னாற்காடு | 15,79,562 |
| திருச்சி | 16 72,116 |
| தஞ்சை | 16,78,500 |
| மதுரை | 16 93,456 |
| இராமனாதபுரம் | 12,38,992 |
| திருநெல்வேலி | 14,33,777 |
| சேலம் | 18,92,768 |
| கோயமுத்தூர் | 18 34 867 |
| நீலகிரி | 1 64 385 |
| மலபார் | 26,85,096 |
| தென்கன்னடம் | 9,60 378 |
| மொத்த வாக்காளர் தொகை | 2,03,72,593 |

## இனி என்ன குறைவு?

தமிழ் நாட்டு தையல்இலைகளுக்கு வந்த வாழ்வே வாழ்வு!

அமிருதசரஸில் பிப் 8-ந் தேதி ஆரம்பமாகப்போகும் காங்கிரஸ் மாநாட்டின் பிரதிநிதிகள் உணவருந்துவதற்குப் பயன்படுத்த 2 இலட்சம் 'தையல் இலை'கள் வழங்குவதற்கு ஏற்பாடு செய்யுமாறு காங்கிரசின் வரவேற்புக் குழு, தமிழ் நாடு காங்கிரஸ் குழுவிடம் வேண்டிக்கொண்டுள்ளதாம்.

### நகரசபை கோரிக்கை — சர்க்கார் நிராகரிப்பு

சென்னை, ஜன. 7—

சென்னை நகரசபையின் சிசு நல, பிரசவ விடுதிகளுக்குச் சிகிச்சைக்காக வருகின்ற 'கர்ப்பிணி'களின் இரத்தம் சம்பந்தமாக அதிகச் சோதனைகள் நடத்துவதற்கெனச் சர்க்காரிடம் நகரசபை கடன் கோரியிருந்தது; ஆனால், சர்க்கார் அக்கோரிக்கையை நிராகரித்துவிட்டிருக்கின்றனர் 1,500 பரிசோதனை விடுதிகளை தற்போது நகரசபை நடத்திவருகிறது.

### கிராமப் பகுதிகளுக்கு விவசாயப் படங்களாம்!

சென்னை, ஜன. 6—

விவசாயம் சம்பந்தப்பட்ட பிரச்சினைகளை இந்திய சர்க்காரும், மாநில சர்க்கார்களும் படமாகத் தயாரித்து கிராமப் பகுதிகளில் காட்ட வேண்டுமென விவசாயத் தகவல் குழு சிபாரிசு செய்துள்ளதாம்.

## மேட்டூர் கால்வாய்: தோண்டும் வேலை பூர்த்தி

மேட்டூர் அணையின் மேற்குக் கரை கால்வாய் தோண்டும் வேலை அநேகமாகப் பூர்த்தியாகிவிட்டதென்றும் ரூ 52,99,343 சென்ற நவம்பர் வரை செலவு செய்யப்பட்டிருப்பதாகவும், 18,000 ஏக்கர் பாசனத்திற்கு தண்ணீர் விடப்பட்டிருப்பதாகவும் கூறப்பட்டுள்ளது.

அமராவதி அணைத் திட்டம் பூர்த்தியாவதற்கு ரூ. 97,72,066 செலவாயிற்றென்றும் குறிப்பிடப்பட்டுள்ளது.

### நால்வர் பேச்சு வார்த்தை நடைபெறுமா?

அணு ஆயுதச் சோதனைகளைத் தடை செய்வது குறித்து, விரைவிலேயே ரஷ்யாவுடன் பேச்சு வார்த்தைகள் மேற்கொள்ளுமாறு மேற்கத்திய வல்லரசுகளுக்கு பிரதமர் நேரு யோசனை கூறுவாராம்.

அணு ஆயுதத் தடைமீது உடன்பாடு ஏற்பட்டால், ஆயுதக் குறைப்புப் பற்றிய பேச்சு வார்த்தையில் ஏற்பட்டுள்ள முட்டுக்கட்டை நீங்கி விடுமெனக் கருதப்படுகிறதாம்.

## அனுமதி பெறுமல் ஆற்றுநீரைதேக்குகின்றனர்

### மைசூர் மீது ஆந்திரா புகார்

பெண்ணாற்றின் கிளை நதியான சித்ரவதி பகுதியில் மைசூர் சர்க்கார் பெரும் குளங்களை அமைத்து வருவதாக ஆந்திர சர்க்காருக்குத் தகவல் கிடைத்துள்ளதாம்.

இம்மாதிரி குளங்கள் அமைக்கப்படுவதால் ஆந்திராவிலுள்ள புக்கபட்டணம், தர்மாவரம் குளங்களுக்குத் தண்ணீர் விநியோகம் குறையுமெனக் கூறப்படுகிறது. இந்த இரு பகுதிகளும் அனந்தபூர் மாவட்டத்தில் உள்ளன.

1892-ம் ஆண்டில் மைசூர்—சென்னை சர்க்கார்கள் இடையே செய்து கொள்ளப்பட்ட ஒப்பந்தத்தை இந்த நடவடிக்கைகள் மீறுவதாக இருப்பதாகவும், மைசூர் சர்க்கார் சித்ரவதியின் தண்ணீரை சேமிக்க விரும்பினால், சென்னை சர்க்காரின் (தற்போது ஆந்திரா சர்க்கார்) அனுமதியை முதலில் பெற வேண்டுமென்றும் தெரிவிக்கப்பட்டுள்ளது.

## மாவட்ட மொழிகளில் நடைபெறுமாம்!

தேர்வுகள் பற்றிய தகவல்

"அகில இந்திய ஊதியத்திற்கான தேர்வுகள், பிரதேச மொழிகளிலேயே விரைவில் நடைபெறக்கூடும்,"

என்று, ஆந்திரப் பொதுப் பணித் தேர்வுக் குழுத் தலைவர், சங்கம் ஒன்றில் பேசுகையில் குறிப்பிட்டுள்ளார்.

## 'டோக்கியோ ரோஜா' விடுதலையாவார்

யுத்த காலத்தில் தண்டிக்கப்பட்ட பட்டம் பெற்ற பெண்மணி

கடந்த யுத்தத்தின்போது டோக்கியோ வானொலியிலிருந்து பேசிய தேசத் துரோகக் குற்றச்சாட்டிற்காகப் பத்தாண்டுகள் சிறைத் தண்டனை விதிக்கப்பட்ட 'டோக்கியோ ரோஜா' என்ற பெண்மணி, ஜனவரி 28-ந் தேதியன்று விடுதலை செய்யப்படுவார் என்று தெரியவருகிறது.

கடந்த 1949 அக்டோபர் திங்களில் சிறைபுகுந்த இவரது உண்மைப் பெயர் ஈவா-தாகுய்னோ-தொகுர் என்பதாகும்.

சிறையில் நன்னடத்தைக்காக தண்டனைக் காலம் குறைக்கப்பட்டு விடுதலை செய்யப்படுவதாக அமெரிக்க நீதி இலாகா அறிவித்திருக்கிறது.

39 வயதான இவர், கலிபோர்னியா பல்கலைக் கழகத்தில் பட்டம் பெற்றவராவார். இப்போது இவர் மேற்கு வர்ஜீனியாவில் ஆல்டெர்சன் எனும் இடத்தில் உள்ள பெண்களுக்கான சிறைக் கூடத்தில் இருந்துவருகிறார்.

## ரஷ்யா தந்துள்ள விவசாய சாதனங்கள்

இந்திய சர்க்கார் சொந்தப் பண்ணையில் உபயோகிப்பர்

புதுடில்லி, ஜன 8—

சோவியத் யூனியன் அளித்துள்ள விவசாய சாதனங்களைக் கொண்டு 30 ஆயிரம் ஏக்கர் கொண்ட சர்க்கார் பண்ணை ஒன்றை நடத்த இந்திய சர்க்கார் உத்தேசித்திருக்கிறதாம்; நாட்டில் இது பெரிய பண்ணையாக இருக்குமாம்.

70 டிராக்டர்கள், சுமார் 60-அறுவடை இயந்திரங்கள், மற்றும் 500-க்கு மேற்பட்ட விவசாயத்திற்கான இதர சாதனங்கள் ஆகியவற்றை சோவியத் யூனியன் அளித்திருக்கிறது.

இராஜஸ்தான் அல்லது ஒரிசா, உத்திரப் பிரதேசத்திலுள்ள லக்கிம்பூர் மாவட்டத்தில் உத்தேச சர்க்கார் விவசாயப் பண்ணை ஏற்படுத்தப்படலாம்.

### மதுவிலக்கு அமுலாகிறது!

ராஜ்கோட், ஜன. 7—

மத்திய சர்க்கார் நிர்வாகத்தின் கீழுள்ள கட்ச மாநிலத்தில், இன்று முதல் முழு அளவில் மதுவிலக்கு அமுலாகிறது.

## 'வேவு' பார்த்த மருத்துவப் பெண்

துப்பாக்கியால் சுட்டு கொலை

நிகோசியாவில் உள்ள பொது மருத்துவமனைக்குள் நுழைந்து ஒரு மருத்துவப் பெண்ணை ஒரு 'பயங்கரவாதி' துப்பாக்கியில் சுட்டுக் கொன்றுவிட்டதாக தெரியவருகிறது.

இந்தப் பெண் போலீசுக்குத் தகவல் தரும் ஒரு உளவாளி என்று கூறப்படுகிறது.

அந்தப் பெண் கடந்த நவம்பர் 28-ந் தேதியன்றும் ஒரு துப்பாக்கித் தாக்குதலுக்கு ஆளானதாயும் கூறப்படுகிறது.

கர்ப்பந்தரித்த பெண்களுக்கு மருத்துவ உதவி தந்துகொண்டிருந்த அந்தப் பெண்மணி, ஆங்காங்கே கிராமத்தில் தான் சேகரிக்கும் தகவல்களைப் போலீசாருக்கு அனுப்பிக்கொண்டிருந்ததாயும், இதனால் பல 'பயங்கரவாதி'கள் சிறைப்பட நேர்ந்தது என்றும், இதனாலேயே அவர் கடந்த நவம்பரில் 'பாமகுஸ்தா' எனும் இடத்தில் சுடப்பட்டதாயும், ஆனால் அப்போது உயிர் தப்பிவிட்டதாயும் கூறப்படுகிறது.

அப்போது பெற்ற துப்பாக்கிக் காயங்களுக்குச் சிகிச்சை பெற்றுக் கொண்டிருக்கும்போதுதான், மருத்துவமனையில் இரவு ஒன்பது மணிக்கு முகமூடி அணிந்த ஒருவர் நுழைந்து மூன்று முறை அப்பெண்மணியைச் சுட்டதாகவும், முதல் இரண்டு குண்டுகள் தப்பிவிட்டதாயும், மூன்றாவது குண்டு நெற்றி மையத்தில்பட்டு தலையைப் பிளந்துவிட்டதாயும் கூறப்படுகிறது.

ஏதென்ஸ் வானொலி அந்தப் பெண்ணை 'தகவல் தருபவர்' என்று வர்ணித்தது.

## பூரண மதுவிலக்கு அமுல் சாத்தியமா?

திட்டக் குழு கருத்து

புதுடில்லி, ஜன. 6—

மதுவிலக்கு விசாரணைக் குழுவின் சிபாரிசுகளின்படி, இலட்சிய பூரண மதுவிலக்கை நாடு முழுவதும் ஒரே மாதிரியாக அமுலுக்குக் கொண்டு வருவதற்குப் பதில், ஒவ்வொரு மாநிலத்தின் தேவைக்கும் சூழ்நிலைக்கும் ஏற்ப படிப்படியாக அமுலுக்குக் கொண்டுவர வேண்டுமென்று திட்டக் குழு கருதுகிறது.

பூரண மதுவிலக்கு இலட்சியத் தேதியான 1958 ஏப்ரலை திட்டக் குழு ஆதரிக்கவில்லை.

பூரண மதுவிலக்குக் கொண்டு வருவதால் வருமானம் குறைபுமாதலால் திட்டம் பாதிக்கப்படலாம் என்று குழு கருதுகிறது.

### எவ்வளவு தெரியுமா?

சென்னை மாநிலத்தில் 5,74,500 ஏக்கரில் ராகி பயிரானதாக மதிப்பிடப்பட்டது.

7,18,000 ஏக்கரில் கம்பு சாகுபடியானதாக மதிப்பிடப்பட்டிருக்கிறது.

7,57,900 ஏக்கரில் சோளம் பயிரானதாக மதிப்பிடப்பட்டிருக்கிறது.

## தி. மா. மு. கழக அமைப்புக் குழு

★

திராவிட மாணவர் முன்னேற்றக் கழக முதல் அமைப்புக் குழுக் கூட்டம், சிதம்பரம் அல்லது அண்ணாமலை நகரில், 28-1-56 மாலை 3 மணிக்கு நடைபெறும். தி. மு. கழகப் பொதுச்செயலாளர் இரா. நெடுஞ்செழியன் அவர்களும், தோழர் கே. ஏ. மதியழகன் அவர்களும் சிறப்பு அழைப்பின்பேரில் கலந்து கொள்ளுகின்றார்கள்.

டி. கே. பொன்னுவேலு,
அமைப்பாளர், தி.மா.மு.க.
'அறிவகம்,' சென்னை-18
4—1—56

### 'எண்ணப் பார்வை'யில் கொள்கை நோக்கம்?

வாடிகன் 'நகர், ஜன. 4—

சென்ற கோடை காலத்தில், ரஷ்ய மொழியைப் போப்பாண்டவர் கற்பதாக ஒரு செய்தி வெளியாகியது; ஆனால், வாடிகன் வட்டாரம் தங்கள் இதழ்களில் இதை நிரூபிப்பதற்கு மறுத்தபோதிலும், ஆங்கிலம், ஜெர்மன், ஸ்பானிஷ், போர்ச்சுகீசிய மொழிகளை அவர் கற்றுக்கொண்டதால், இம்மொழியையும் கற்பதற்கு அவர் முயற்சித்திருக்கலாம் எனக் கூறினவாம்!

## செய்திச் சுருள்

★

### சுரங்கத் தொழிலாளர் பொதுக்கூட்டம்

திருச்சி—பெரம்பூர் தாலுகா மூங்கில்பாடியில், 4—1—56 மாலை 6 மணிக்கு மாரியம்மன் கோயில் மைதானத்தில் திருச்சி மாவட்ட ஜிப்சம்—சுரங்கப் பொதுத் தொழிலாளர்கள் சங்கப் பொதுக்கூட்டம் தோழர் எம். வடிவேல் தலைமையில் நடைபெற்றது.

தொழிற் சங்கத்தின் அமைப்பு குறித்து தோழர்கள் எம். எஸ். மணி, எஸ். ஜி கிருஷ்ணன், ஐ எம். சரீப், கோ. சிவபெருமாள், ஏ. நாராயணன், கை. சுப்பையா ஆகியோர் பேசினர்.

தொழிற் சங்கம் அமைப்பு

அன்று இரவு தொழிலாளர்கள் ஒன்றுகூடி புதிய தொழிற் சங்கம் ஒன்றை நிறுவி, சங்க நிர்வாகிகளைத் தேர்ந்தெடுத்தனர்:—எம். வடிவேல்: தலைவர்; வைரப்ப உடையார்: துணைத் தலைவர்; ஏ. நாராயணசாமி: செயலாளர்; என். அர்ஜுனன்: துணைச் செயலாளர்; பி. பாண்டியன்: பொருளாளர்; தோழர்கள் எம். அப்பாதுரை, பி. கணேசன், ஏ. சாமிநாதன், எம். நடேசன், கோ பொன்னுசாமி, பூ. தனபால் ஆகியோர் செயற் குழு உறுப்பினர்களாவர்.

### சௌந்திரபாண்டியனர் பகுத்தறிவு மன்றம்

1—1—56 மாலை 6 மணிக்கு, பம்பாய் - தாராவி 'அன்பகத்'தில் மேற்படி மன்ற உறுப்பினர்கள் கூட்டம் தோழர் இரா. தர்மராசன் தலைமையில் நடைபெற்றபோது, பொங்கல் விழாவை 14—1—56ல் பாண்டியனர் திடலில் நடத்துவதென முடிவு செய்யப்பட்டதுடன் புயல் - வெள்ள நிவாரண நிதி திரட்டுவதெனவும் தீர்மானிக்கப்பட்டது.

### நடனக் கலை வளர்ச்சிக் கழகத் துவக்க விழா

1—1—56 மாலை 8 மணி அளவில், கல்லக்குடியில் நாடகக் கலை வளர்ச்சிக் கழகத் துவக்க விழா திரு. பி. ராஜகோபால் இல்லத்தில் நடைபெற்றது.

தோழர் பி. ராஜகோபால் அவர்களைத் தலைவராகக் கொண்ட குழு ஒன்று அமைத்து தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டது.

# ஆலைத் தொழிலாளரிடை அண்ணு

## பல்லாயிரம் தொழிலாளர் திரண்டனர்—மாநில மாநாட்டிற்கு நிதியளித்தனர்

சென்னை, ஜன. 9—

பக்கிங்காம் அண்டு கர்நாடிக் ஆலைத் தொழிலாளர்கள், தி. மு. கழக 2-வது மாநில மாநாட்டிற்கு நிதியளிப்பதற்காகக் கூட்டியிருந்த கூட்டம் மகத்தான வெற்றியாய் அமைந்தது.

கூட்டத்திற்குப் பல்லாயிரக்கணக்கான தொழிலாளர்களும், ஏராளமான பொதுமக்களும் தாய்மார்கள் பலர் உட்பட திரண்டிருந்தனர்.

கூட்டத்தில் அண்ணு அவர்கள், தொழிலாளர்கள் — தி. மு. கழக நிலை குறித்து அரிய விளக்கம் தந்தார்கள்.

தோழர் டி. எஸ். சண்முகம் தலைமையில் நடைபெற்ற அந்தக் கூட்டத்தில், ஆலைத் தொழிலாளத் தோழர்களான சுப்பிரமணியன், எல்லப்பன், கதிர் சுப்பிரமணியன் ஆகியோர் தி. மு. கழகத்திற்கு பக்கிங்காம் - கர்நாடிக் ஆலைத் தொழிலாளர்கள் நிதி தருவதின் நோக்கத்தையும், தொழிலாளர்கள் தி. மு. கழகத்தின் ஆதரவைக் கோருவதற்கான காரணங்களையும், தங்களுக்குள்ள தொழிற் சங்கங்களின் குறைபாடுகளைக் குறித்தும், தங்களுக்குள்ள பிரச்சினைகளை விளக்கியும் பேசினர்.

பின்னர் தோழர்கள் முகவை ஆர். எஸ். பாண்டியன், போளூர் கே. சுப்பிரமணியம், கே. எ. மதியழகன் ஆகியோர் பேசிய பின், தோழர் காசிநாதன் அவர்கள் ஆலைத் தொழிலாளர்கள் சார்பில் நிதி அளித்தார்.

தொடர்ந்து பல தொழிலாளர்கள் நிதி அளித்தனர்.

அண்ணு அவர்கட்கு பல மன்றங்கள், கழகங்கள் சார்பில் கைத்தறி ஆடைகள் அணிவிக்கப்பட்டன.

இறுதியாக அண்ணு அவர்கள் கருத்துரை வழங்கியதும், தலைவர் முடிவுரையுடன், நிதிக் குழுச் செயலாளர் நன்றி நவின்ற பின் கூட்டம் இனிது முடிவுற்றது.

கூட்டத்தில் அண்ணு அவர்கள் சிலரின் குழந்தைகட்கு பெயர் சூட்டினர்கள். (விவரம் பின்னர்)

மாநில மாநாட்டிற்கு — பக்கிங்காம் - கர்நாடிக் ஆலைத் தொழிலாளர் ரூ. 322—3—0; சி. ஆறுமுகம் மூலமாக ஸ்பென்சர் கம்பெனி தொழிலாளர்கள் ரூ. 47—2—0; தண்டையார்பேட்டை பர்மா ஷெல் இன்ஸ்டலேஷன் தொழிலாளர்கள் ரூ. 12-8-0 கூட்டத்தில் உண்டியல் வசூல் ரூ. 18—0—0; அளிக்கப்பட்டது.

# சென்னையில் திராவிடர் திருநாள்

## கிளைக் கழகங்களின் கவனத்திற்கு:

"இவ்வாண்டு திராவிடர் திருநாள் விமரிசையான விழாவாக, சென்னை-சிந்தாதிரிப்பேட்டை நேப்பியர் பார்க்கில் கொண்டாடப்படவிருக்கிறது. இசை விருந்தும், நாடக விருந்தும் செவிக்கும் சிந்தனைக்கும் களிப்பூட்டும் வகையில் ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது.

"ஆண்டுதோறும் சிறப்புற நடைபெறும் விளையாட்டுப் போட்டிகளும் இடம் பெற்றுள்ளன. வெற்றி பெறுகிறவர்களுக்கு, தோழர் கே. ஆர். இராமசாமியின் முதற் பரிசுகளும், இரண்டாம் பரிசுகளும், மூன்றும் பரிசுகளும வழங்கப்படும் என்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கிறேன்.

"இதோடல்லாமல், எந்தக் கிளைக் கழகம் எல்லா போட்டிகளிலும் பெருவாரியான தோழர்களை கலந்துகொள்ளச்செய்து பெருமிதமான வெற்றியை அடைகிறதோ, அக்கிளைக்குத் தோழர் மு. கருணாநிதியின், 'உலாவரும வெண் பொற்கலம்' (ரோலிங் கப்) பரிசாக வழங்கப்படும் என்பதை உவகையுடன் தெரிவித்துக் கொள்கிறேன்.

"போட்டியில் கலந்து கொள்ள நினைக்கும் தோழர்கள், கிளைக் கழகச் செயலாளர்களின் உரிமைச் சீட்டுடனும், ஒவ்வொரு போட்டிக்கும் எட்டணு கட்டணத் தொகையுடனும், இராயபுரம், 'அறிவகத்'தில் இன்றே வந்து பதிவு செய்துகொள்ள வேண்டும் என்று கேட்டுக் கொள்ளுகிறேன்,"

என்று, சென்னை மாவட்ட தி மு கழகச் செயலாளர் தோழர் இளம்பரிதி அறிவிக்கிறார்.

# நெடுஞ்செழியன் விளக்கம்

(1-ம் பக்கத் தொடர்ச்சி)

வழி மாநிலம் அமையவேண்டும் என்று கருதினனே ஒழிய, மொழிவழி மாநிலம் அமைய வேண்டும் என்று எண்ணவில்லை.

"வெள்ளைக்காரன் ஏற்படுத்திய ஆதிக்க அமைப்பு மாறவேண்டும் — என்று முதலில் எண்ணியவர்கள் இந்திய தேசிய காங்கிரஸ்காரர்கள்தான்; நேரு முதல் தேபர் வரை அகில இந்தியக் காங்கிரஸ் தலைவர்கள் அனைவரும் அதைச் சொல்லி வலியுறுத்தினர்கள் என்றுல், 'மொழிவழி மாநிலம் அமைய வேண்டும்' என்பதைத்தான்.

"மொழிவழி மாநிலம் வேண்டுமென்று முன்பு சொல்லிவந்த இராசகோபாலாச்சாரியார், இப்பொழுது சொல்லுகிறர் — 'மொழிவழி என்பது காட்டுமிராண்டித்தனம்'—என்று; நான் மிகச் 'சாமான்யன்'; அவர் பகவத் கீதைக்கு விளக்கம் தரும் 'மகான்'! அவருக்குச் சொல்லுவேன்—காட்டுமிராண்டி, காடுகளிலே திரிந்து பச்சை மாமிசத்தைத் தின்று நாகரிகமற்று இருப்பானே தவிர, மொழிவழி மாநிலம் அமைக்கப்பட வேண்டும் என்று கூறமாட்டான்! ஒருகாலத்தில் நாகரிகமாகப் பட்ட 'மொழிவழி மாநிலம்' இப்பொழுது எப்படி காட்டுமிராண்டித்தனமாக மாற்றது என்று தெரியவில்லை.

"மொழிவழி மாநிலம் என்று தொடர்ந்து வற்புறுத்திவந்த காங்கிரஸ் மேலிடம், பீர்மேடு, தேவிகுளம், செய்யாற்றங்கரை ஆகிய தமிழ்ப் பகுதிகளிடத்தில் வரும்போது, 'பொருளாதார வழி' பேச ஆரம்பித்து விடுகிறர்கள். பொருளாதார வழிதான் மாநிலங்கள் பிரிக்கப்பட வேண்டும் என்றுல், இந்தியத் துணைக் கண்டம் முழுவதையும் சரிசமானமான வருமானமுள்ள பதினைந்து மாநிலங்களாகவோ, இருபது மாநிலங்களாகவோ பிரிக்க முற்பட வேண்டும். அப்படிச் செய்தால், அதில் 'பொருளாதார வழி' இருக்கிறது என்று சொல்லலாம்.

"தேவிகுளம்-பீர்மேடு பகுதிகளைப் பொறுத்துப் பேசும் போது மட்டும் பொருளாதாரக் காரணங் காட்டி, அவற்றைக் கேரளத்தோடு இணைக்கக் காங்கிரஸ் மேலிடம் முயலுகிறது என்றுல், அது தமிழர்களை ஏமாற்றுவதற்குக் கூறப்படும் ஒரு நொண்டிக் காரணமேயாகும்.

"'தூங்கினவன் துடையில் திரித்த வரையில் இலாபம்' என்ற பழமொழிக்கிணங்க, இந்திய சர்க்காரும்—திரு-கொச்சி சர்க்காரும்—ஆந்திர சர்க்காரும் நடந்துகொள்கின்றன. ஆனுல், சென்னை சர்க்காரோ, மற்றவர்கள் கயிறு திரிப்பதற்கு ஏற்ற வகையில் துடையைக் கொடுத்துவிட்டுத் தூங்கிக் கொண்டிருக்கிறது.

"திரு-கொச்சிப் பகுதியில் சுமார் 2,000 சதுர மைல் பரப்பும், ஆந்திரப் பகுதியில் சுமார் 2,500-க்கு மேற்பட்ட சதுர மைல் பரப்பும் தமிழகத்தோடு இணைக்கப்படவேண்டும்என்று ஆராய்ச்சியாளர்கள் கூறுகிறர்கள்.

"தமிழகத்தோடு சேரத் தவித்துக் கொண்டிருக்கும் பகுதி மக்களை இருகை நீட்டி வரவேற்கவேண்டிய முக்கிய கடமைத் தாய்த் தமிழகத்தைச் சார்ந்ததாகும். தமிழும் தன் இருகை நீட்டி அப்பதிகளை வரவேற்கத் தக்க அளவுக்கும், அவை வாரி அணைத்துக் கொள்ளும் அளவுக்கும் தமிழகத்துக்கு வலிவும், ஆணிவும் ஊட்ட வேண்டிய பொறுப்பு நம்மைச் சார்ந்ததாகும். அதற்கான வீரர் படையைத் திரட்டவே 'தமிழகப் பகுதிகள் இணைப்புக் குழுவினர்' இந்த ஏற்பாட்டைச் செய்திருக்கிறர்கள்.

"எந்தெந்த நடவடிக்கைகளை மேற்கொண்டால் தமிழகத்தில் சேராமல் ஏஞ்சி நின்று தவித்துக் கொண்டிருக்கும் தேவிகுளம்—பீர்மேடு — செய்யாற்றங்கரை — திரு-கொச்சி சித்தூர்—பாலக்காடு — ஆந்திரா சித்தூர்—புத்தூர்— திருத்தணி போன்ற பல்வேறு தமிழ்ப் பகுதிகளைத் தமிழகத்தில் சேர்க்க முடியுமோ அந்தந்த நடவடிக்கைகளை நாம் மேற்கொள்ள வேண்டும். அதற்கான திட்டங்களைப் பொதுப்படையாக நின்று தீட்டவே இணைப்புக் குழு ஒன்றினைப் பல்வேறு அரசியல் கட்சியினரின் கூட்டுறவோடு நண்பர்கள் ஏற்படுத்தியிருக்கிறர்கள். இந்தக் குழு அவ்வப்போது தக்கமுறையில் தீட்டித் தரும் ஏற்ற திட்டங்களை ஏற்று நடத்துவதற்கு நாங்கள் என்றென்றும் தயாராக இருக்கிறேம் என்பதைத் திராவிட முன்னேற்றக் கழகத்தின் சார்பாக நான் இம்மாபெரும் பொதுக்கூட்டத்தில் தெரிவித்துக்கொள்கிறேன்.

"கேளுங்கள் கொடுக்கப்படும்; தட்டுங்கள் திறக்கப்படும்."

# ஈ.வெ.கி. சம்பத் எச்சரிக்கை

(1-ம் பக்கத் தொடர்ச்சி)

பெயரால் மடமைக்குப் பலியான மாந்தர்களின் நிலையையும் நேரில் கண்டறியச் சென்றேம். நாங்கள் கேள்விப்பட்டதையெல்லாம்விட ஆபாசமான, அசுத்தமான நிலையில் அந்தக் 'கோயில்' இருந்ததைத்தான் கண்டோம்.

"அதைப் பார்த்தபோது உண்டான அருவருப்பால் அன்றிரவு உணவுகூட உட்கொள்ள முடியவில்லை; தமிழ்நாட்டிலாவது சிறந்த சிற்பக் கலையின் நிழலில் கடவுள் 'வியாபாரம்' நடைபெறுகிறது; ஆனுல், காசியில் கக்கூஸ் குழி போன்ற அமைப்பும், நாற்றமும் கொண்ட ஒரு இடத்தில், மொட்டைக் கல்லை நட்டு வைத்துக்கொண்டு 'கடவுள்' வியாபாரம்மும்முரமாக நடைபெறுவதையே கண்டோம் அழகு வடியும் நடராஜர் கோவிலும், சிலையுமே என்னை மடையனுக்க முடியாத போது, அலங்கோலம் பிடித்த அந்தக் குகையும், அதில் உள்ள அந்தக் கண்ருவிக் கல்லுமா என்னை மயக்கிவிட முடியும்?

"கொள்கைரீதியில், தத்துவ ரீதியில், நம்மோடு விவாதித்து வெல்லும் வகையற்று, தமிழ்நாட்டு அரசியலில் அடிக்கடி தடுக்கி விழுந்து, மேல் மூச்சு கீழ்மூச்சு வாங்கும் பரிதாபத்துக்குரிய கம்யூனிஸ்டுக் கட்சி, தனது இதழ் மூலம் 'வதந்தி வாணிபத்'தில் ஈடுபட்டு, போயபல்சே கண்டு நானும் போயபிலும் புளுகிலும் திளைப்பது கண்டு நான் மிகவும் பரிதாபப்படுகிறேன்.

"மற்றென்று; என்னுடைய காரின் நெம்பரும், நிறமும் சென்னையிலும், திருச்சியிலும் எப்படி உள்ளனவோ அப்படியேதான் காசியிலும், கல்கத்தாவிலும், டில்லியிலும் காணப்படும்! ஏதோ, எவராலும் கண்டுபிடிக்க முடியாத மர்மத்தைக் கண்டுபிடித்ததுபோல் என்னுடைய காரின் நெம்பரும், நிறமும் கொட்டை எழுத்துக்களில் பிரசுரிக்கப்பட்டிருக்கின்றன!

"கயா என்னும் ஊருக்கு நாங்கள் செல்ல விரும்பினேம்; ஆனுல், செல்ல முடியவில்லை. கயாவுக்குச் சென்றதாகவும், அங்கே சாமி கும்பிட்டதாகவும் 'ஜனசக்தி' கயிறு திரிக்கின்றது.

"எனக்கு விவரம் வந்த நாட்களிலிருந்தே நான் எனது 'சின்னையாவின் கட்சி'யாகத்தான் வீட்டில் விளங்கி வந்தேன். அந்த நாட்களில் எனது தந்தையும், தாயும் வைதீகத்தில் மூழ்கிக் கிடந்தனர். வைஷ்ணவ சிகாமணிகளையும், சுயமரியாதைச் சூறவளிப் படையினரையும் கண்டபோது எனது பிஞ்சு மனம் சுயமரியாதை வீரர்களின்பால்தான் லயித்திருந்தது. எனது ஆருவது வயதில் தெருப்பிள்ளையாருக்குக் காலணிகளைக் கொண்டு 'அர்ச்சனை' செய்தமைக்கு அடிகூட வாங்கியிருக்கிறேன். எனது சிறு வயதில் இயற்கையாகஏற்பட்ட நாஸ்திக வளர்ச்சி, வயதும், அனுபவமும் வளர வளர, மேலும் மேலும் வலுப்பட்டு நல்ல பண்பட்ட நாஸ்திகனுகவும், கடைந்தெடுத்த ஆஸ்திக சிகாமணிகளையும் எனது கொள்கைக்குத் திருப்பும் திறனுடைய தெளிந்த நாஸ்திக வாதியாகவும், என்னை வளர்த்துள்ளது என்பதை நாடறியும்.

"கயிறு திரிக்காதே! திரிக்கும் கயிறு சில வேளைகளில் திரிப்போரின் கழுத்தையே இறுக்கினும் இறுக்கும்," என்று கம்யூனிஸ்டுக் கட்சியின் வார இதழை இதன் மூலம் எச்சரிக்கிறேன்."

# உடுமலைப்பேட்டை உயர்நிலைப்பள்ளி மாணவர்களின் அறப்போர்

உடுமலைப்பேட்டை, ஜன. 5—இன்று, இங்கு செலக்ஷன பரீட்சையின் முடிவுகள் அறிவிக்கப்பட்டது. அநியாயமாக 20 மாணவர்களுக்கும் பள்ளி அதிகாரிகள் அரசாங்கப் பரீட்சைக்குப் போக அனுமதி அளிக்க மறுத்துவிட்டனர்.

இதன் காரணமாகக் கொதிப்படைந்த மாணவர்கள் பொது வேலை நிறுத்தம் செய்துள்ளார்கள்; மாணவர்கள் உண்ணுவிரதமும் மேற்கொண்டுள்ளனர். நீதி கிடைக்கும்வரையில் போராடுவதென உறுதிகொண்டுள்ளனர்.

திராவிட மாணவர் முன்னேற்றக் கழகத்தைச் சார்ந்த மாணவர்கள் போராட்டத்தை முன்னின்று நடத்துகின்றனர்கள். (ச. நி)

## வேலூர்

வேலூர் கந்தசாமிக் கண்டர் உயர்நிலைப் பள்ளியில் பயின்று வரும் இறுதி வகுப்பு மாணவர்கள் 142 பேர்களில் 41 மாணவர்களை அரசாங்க (பொது) தேர்விற்குச் செல்ல முடியாமல் நிறுத்தி விட்டனர்.

# கோவா எனக்குச் சேர வேண்டும்

(1-ம் பக்கத்தின் தொடர்ச்சி)

'கி. பி. 1565-ம் ஆண்டிற்கு முன்பு வரை எனது மூதாதையர்களால் ஆண்டுவரப்பட்ட கோவாவை, அவர்களது நேர்வாரிசான என்னிடத்தில் ஒப்படைக்க வேண்டும்—திரும்பத்தர வேண்டும்' என்று வட ஆர்க்காட்டைச் சேர்ந்த வீரபோகா வசந்த ராயலு என்பவர் போர்ச்சுகீசியருக்குத் தூது அனுப்பியிருப்பதாகத் தெரியவருகிறது.

'வேலூர், விஜயநகர மன்னர்களாயிருந்த எனது முன்னேர்கள், போர்ச்சுகீசியருக்குக் கோவாவையும், பிரெஞ்சுக்காரருக்குப் பாண்டிச்சேரியையும், சென்னைக் கடற்கரையைப் பிரிட்டிஷாருக்கும் வர்த்தகம் புரிவதற்காகத் தந்தார்கள்' என்றும் வீரபோகா கூறுகிறராம்.

தனது முன்னேர்களின் ஆளுகைக்குட்பட்டிருந்த பிரதேசத்தைத் தான் ஆளுவதற்கு அனுமதி வழங்க இந்திய சர்க்கார் மறுத்துவிட்டமையால் போர்ச்சுகீசியர் கோவாவைத் திரும்பத் தரவேண்டும் என்றும் ராயலு கோருகிறராம்!

திராவிட முன்னேற்றக் கழகத்துக்காக தோழர் இரா. நெடுஞ்செழியன், எம். ஏ. அவர்களால் அழகிரி அச்சகத்தில் அச்சிடப்பெற்று, (24 சூரியநாராயண செட்டித் தெரு, இராயபுரம், சென்னை) வெளியிடப்பெறுகிறது. ஆசிரியர்: இரா. நெடுஞ்செழியன் எம்.ஏ

